தலைமகன் மறுத்தல்.

(இது வெளிப்படை.)

பாரோ முலைவிலை யென்பர் நின்கேளி ரோன் பல்கிளைவாழ்
உளரோ வணிபதன் றேண்டொடி யாப்விதை யுண்கண்களோ
தாரோ வளரும் புயன்றஞ்சை வாணன் றரியலர்போல
யாரோ தனிநடப் பாரருங் கானமிவ ளுடனே.

இ - ள். ஒள்ளியவளையினையுடையாய்! நின் சுற்றத்தார் பாரை முலை விலையென்று சொல்வாரோ? உடன்கொண்டுபோதற்கு என் சுற்றத்தார் வாழுகின்ற ஊரணிததன்று. அன்றியும், போவாமென்னில் கரியமா இன் மையுண்டகண்களோ தாரோவளரும் புயத்தையுடைய தஞ்சைவாணனுக் குத் தரியலர்போல அரியகாட்டில் இவளுடன் தனியாய் நடப்பவர்யார?

எனவே, - தரியலர்செல்லுங் கானத்தில் ஏனோர்சேறல் அரிதென்று கூறியவாறாயிற்று. பாரோஎன்புழி ஓகாரம் என்பர் என்பதனோடு கூட்டுக. அவ்வோகாரம்-வினா. உளா-யாா எனபுழி, ஓகாரம இரண்டும் அசைநிலை. கண்களோ, தாரோ என்புழி ஓகாரமிரண்டும எண்ணின்கண் வந்தன. ()

அவளுடன்படுத்தல்.

அவளுடன்படுத்தல் என - து. பாங்கிதலைவனை யுடன்படுத்தல்.

சுருளேய் குழலுஞ் சுணங்கேய் முலையுஞ் சுமந்துகற்புப்
பொருளே யெனச்சுரம் போதுமப் போது புகழ்வெயிலான்
மருளேய் கலியிருண் மாற்றிய வாணன்றென் மாறையினின்
அருளே யொழியவுண் டோநிழ லாவ தணங்கினுக்கே.

இ - ள். சுருள்பொருந்திய குழற்பாரமுஞ் சுணங்கியைந்தமுலைப்பா ரமுஞ் சுமந்து பொருளாவது கற்பேயெனத்தெளிந்து சுரத்திற்செல்லும் போது தன்புகழருளாகிய வெயிலினாலே மயக்கம்பொருந்திய கலியாகிய இருளைமாற்றிய வாணன் தென்மாறை நாட்டிலிருக்கின்ற அணங்கினுக்கு நிழலாவது நின்னருளையே நிழலென்றுகொள்ளுவதல்லாது வேறொன்றை நிழலென்று கொள்ளப்படாது. எ - று.

சுருள் - கடைகுழற்சி, சுணங்கு - மாமைநிறம். உம்மை - எண். பொருளே என்புழி ஏகாரத்தைக் கற்பொடுகூட்டித் தேற்றப்பொருண்மை யாக்க. மருள் - மயக்கம். மருளே என்புழி ஏகாரம் ஈற்றசை. (கூoஎ)

### தலைவன் போக்குடன்படுதல்.

(இது வெளிப்படை.)

நஞ்சோ வழலோ வெனுஞ்சுர மோசெல்ல நாடியவென்
னெஞ்சோ கொடியது நேரிழை யாய்நிழன் மாமதியோ
மஞ்சோ தவழ்மதில் சூழ்தஞ்சை வாணன் வரையிலவம்
பஞ்சோ வனிச்சங் கொலோவெனுஞ் சீறடிப் பைந்தொடிக்கே.

இ - ள். நேரிழையாய்! ஒளியையுடைய மதியுமுகிலுந் தவழப்பட்ட மதில்சூழ்ந்த தஞ்சைவாணன் வரையிலுள்ள இலவம்பஞ்சோ அல்லது அனிச்சம்பூவோ வென்று சொல்லப்பட்டசிறிய அடியையும் பசியகொடியையுமுடையாட்கு நஞ்சோ அழலோவென்று சொல்லப்பட்ட காட்டிற் செல்லக்கருதிய என்னெஞ்சோ மிகக்கொடியது. எ - று.

பைந்தொடி - அன்மொழித்தொகை. அழல் - நெருப்பு. நிழல் - ஒளி. அனிச்சம் - ஆகுபெயர்.

நஞ்சோ, அழலோ என்புழி ஓகாரமும், பஞ்சோ என்புழி ஓகாரமும் அனிச்சங்கொலோ என்புழி ஓகாரமும், ஐயம். சுரமோ என்புழி ஓகாரமும், கொலோ என்புழி ஓகாரமும் அசைநிலை. நெஞ்சோ என்புழி ஓகாரம் சிறப்பு. மதியோ, மஞ்சோ என்புழி ஓகாரமும் எண்ணின்கண் வந்தன. ()

### தலைவிக்குடன்போக்குணர்த்தல்.

தலைவிக்குடன்போக்குணர்த்தல் எ - து. தலைவனுடன்போதலைப்பாங்கி தலைவிக்குணர்த்தல்.

பாலன்ன பாயற் பகையென்னுஞ் சீறடி பட்டுருவும்
வேலன்ன கூர்ங்கன் மிதிக்குமோ வென்னா மேதினிக்கு
மாலன்ன வாணன்றென் மாறைநன் னாட்டு வயலுகளுஞ்
சேலன்ன நீள்விழி யாய்தெரி யாதன்பா சிந்தனையே.

இ - ள். மேதினிக்குமாலைபோன்றவாணனது தென்மாறைநாடுசூழ்ந்தவயலிற்பிறழப்பட்ட சேலையொத்த நீண்ட விழியினையுடையாய்! மல்லிகைப்பூவால் நிறைத்தலாலாய பாலையொத்த படுக்கையைப் பகையென்று சொல்லப்பட்ட சீறடியாயின் அது பட்டுருவப்பட்ட வேல்போன்ற கூரிய கல்லைமிதிக்குமோ வென்றதனால் அன்பா நினைந்த சிந்தனையாதோ தெரியாது. எ - று.

'மல்லிகைப்பூ வானிறைத்தல' என்பது அவாய்நிலையான்வந்தது. பாலன்னபாயல் - வண்ணவுவமம். பாயல் - படுக்கை. உகளுதல் - புரளுதல். போல் - ஐயம்.

([illegible])

## தலைவி நாணழிவிரங்கல்.

தலைவி நாணழிவிரங்கல் எ - து. உடன்போக்கில் நாணழியுமேயென்றதற்குத் தலைவி யிரங்கிக்கூறல்.

---

மறவாகை வேலங்கை வாணனை மாறையர் மன்னனைத்தம்
உறவாக வெண்ணி யுறாதவர் போலுயி ரோம்பிப் பெண்ணும்
துறவாத நாணந் துறப்பது வேண்டலிற் றொல்லுலகில்
பிறவா தொழிகநன் றேயொரு காலமும் பெண்பிறப்பே.

இ - ள். வீரத்தால் வெற்றிகொண்ட வேலை யகங்கையிற் பிடித்த வாணனை மாறைநாட்டார்க்கு மன்னவனைத் தமக்குறவாக வெண்ணி யுறாத பகைவர்போல உயிர்காத்தற்பொருட்டு என்றுந் துறத்தற்குத் தக்கதல்லாத நாணத்தைத் துறப்பது வேண்டுதலால், பழைமைபதாகிய உலகில் ஒருகாலமும் பெண்பிறப்புப் பிறவாதொழிந்துவிடலானன்று. எ - று.

மறம்-வீரம். வாகை-வெற்றி, அங்கை-அகங்கை * "அகமென்கிளவிக் குக்கைமுன் வரினே - முதனிலை யொழிய முன்னவை கெடுதலும் - வரைநிலையின்றே யாசிரியர்க்க," என்னுஞ் சூத்திரத்தானுணர்க. ஓம்பல்-காத்தல்.

## கற்புமேம்பாடு பாங்கி கழறல்.

கற்புமேம்பாடு பாங்கி கழறல் எ - து. கற்பின்மேம்பாட்டைப் பாங்கி தலைவிக்குக் கூறிநிற்றல்.

செங்காண் மலரிற் றிருவன்ன கோலத் தெரிவையர்க்கு
மெய்ந்நா ணுயிரினு மிக்கதன் றுறவில வாவரசர்
தந்நாண் முறைமை தவிர்த்தருள் வாணன் றமிழ்த்தஞ்சைநாட்
டந்நா ணமுமட வாய்கற்பு நோக்க வழகிதன்றே.

இ - ள். மடப்பத்தையுடையாய்! சிவந்த முறுக்கவிழ் பருவத்ததாய் தாமரைமலரிருக்கின்ற திருவையொத்த அழகையுடைய தெரிவையர்க்கு மெய்யினகணிருக்கின்ற நாண் உயிரினுஞ்சிறந்ததென்றுசொல்லின், உறவு கல்லாத வேந்தர் தம்முடைய வாழ்நாள் முறைமை தவிர்த்தவர் இளையாளவரிடத்து அருளைத்தரும் வாணன் தமிழ்த்தஞ்சைநாட்டில் நீ சொல்லப்பட்ட இந்நாணமுங் கற்பைக்கருதுமிடத்தில் அழகிதன்று. எ - று.

---

* தொல். எழுத். புள்ளிமயங்கியல், சூ. உ0

தீநு வென்று கூறினமையால் செந்நாண்மலர்-தாமரைமலர். கோலம்-அழகு. விரவுதல்-கலத்தல். * "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ் செயிர்தீர் காட்சி கற்புச்சிறந்தன்று" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. (உகச)

## தலைவியோருப்பட்டேழுதல்.

(இது வெளிப்படை.)

பலரே சுமந்த வுரைகளுந் தாயர்தம் பார்வைகளுள்
சிலரே சுமந்து திரியவல லாரசெய்ய செண்பகநாண்
மலரே சுமந்த வயற்றஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
அலரே சுமந்து சுமந்திந்த வூரினி னழுங்குகவே.

இ - ள். பலரேசிச்சொல்லும் அந்தவார்த்தைகளும் தாயார் சினந்து பார்க்கின்ற கொடியபார்வைகளும் சுமந்து திரிய வல்லமையுடையார் சிலருளர், என்றாலு முடியாது, சிவந்த சண்பக நாண்மலரைச்சுமந்த வயல் சூழ்ந்த தஞ்சைவாணனை வாழ்த்தாப் பகைவர்போல வசைகூறுஞ் சொல் லையே சுமந்து சுமந்து இந்தவூரிலுள்ளோர் நின்றிரங்குக. எ - று.

'சுமந்து திரியவல்லார் சிலரே'யெனக்கூட்டுக. 'என்றுன்முடியாது' என்பது அவாய் நிலையானவந்தது 'இந்தவூரினின்றழுங்குகவே' என்பது இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்துமேல் நின்றது. அழுங்குதல்-இரங்குதல்; கெடுதலென்று பொருள்கூறுவாருமுளர். இவள் கற்புடையளாதலால் கூறியசொற்பிழைபாளாதலால், அவ்வாறன்றிமீண்டுவந்து மணமுடித்தல்லது பொருளன்மையுணர்க. இரங்கல் பொய்க்குமோவெனில் இருவருடன் போயினபின்னர் அவ்வூரிலுள்ளாரிரங்குதலின் பொய்யாதாயிற்று.

## பாங்கி சுரந்தியல்புரைத்துழி தலைமகள் சொல்லல்.

(இது வெளிப்படை.)

செல்லிற் கொடியகளிற் றண்ணல் வாணன்றென் மாறைமன்னன்
வில்லிற் கொடியபு ருவமின் னேயென் விளம்புதிநீ
சொல்லிற் கொடியநம மன்னையைப் போல்பவர் சூழ்ந்திருக்கும்
இல்லிற் கொடியகொல் லோசெல்லு நாட்டவ் விருஞ்சுரமே.

இ - ள். இடியினுங் கொடியதாகிய களிற்றுப் பெருமையையுடைய வாணனாகிய தென்மாறை மன்னனது கையிற்பிடித்த வில்லினுங் கொடிய புருவத்தையுடைய மின்போன்றவளே! யான் செல்லுநாட்டில் அப்பெரியசுரமானது சொல்லிலே கொடியளாகிய நம்மன்னையைப்போல்வார் சூழ்ந்திருக்கும் இல்லினுஞ் சுரங் கொடியதோ? எ - று.

---

* தொல். பொருள். களவியல், சூ. கக௩.

'சுரக்கொடியதென நீ விளம்புதி' என்றியையும். சொல்லின் என்புழி சிறப்பும்மை தொக்குநின்றது. செல்-இடி. அண்ணல்-பெருமை கொல்-அசை. ஈகாரம்-எதிர்மறை. சுரம்-காடு. (க.கக)

### பாங்கிகையடைகொடுத்தல்.

பாங்கி கையடைகொடுத்தல்- எ - து பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடைகொடுத்தல். கையடை-அடைக்கலம்.

---

* "பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னாடிறத் துச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயி னருமறையின்
திறந்திரி தார்கலி யும்முற்றும் வற்றுமிச் சேணிலத்தே."

[இது பிறசெய்யுட்கவி.]

† "வடமால் வரைகிளை சாயினும் வண்புயல் வாரிபுகும்
கடனு கியநெறி கைவிட நீங்கினுங் கந்தலைக்கும்
அடன்மா களிற்றன்ப நின்னையன் றோர்பின் னை யென்னையென் றோர்
உடலுய கேண்மை யொழிந்தறி யாரிவ் வுலகத்திலே."—இது உரைகாரர் எடுத்துக்கூறிய பிறசெய்யுட்கவி. (கககச)

### பாங்கிவைகிருள்விடுத்தல்.

பாங்கிவைகிருள்விடுத்தல் எ - து பாங்கியிருளார்ந்த இடையாமத்தில் விடுத்தல் வைகுதல் - தங்குதல்.

---

பொழிகான மன்றலம் பூங்குழ லீர்கள் புணர்ந்துசெல்லும்
வழிநாடி நுயபின் வருகுவ லியான்றஞ்சை வாணன்வையைச்
சுழிநாணு முந்தியின் சுற்றத்தைக் கேற்பன சொல்லியின்று
மொழிநா வடங்க மொழிந் தயலாரை முகங்கவிழ்த்தே.

இ - ள். மான்மதம் பொழிபப்பட்ட மணத்தோடுகூடியபூவையணிந்த குழலையும் தஞ்சைவாணன் வையைச் சுழிநாணப்பட்ட வுந்தியையுமுடையாய்! நின்பழமையால்வருகின்ற சுற்றத்தார்க் கேற்பனசொல்லி அயலாரை அலர்கூறியநாவடங்க மொழிந்து தலைவனையச் செய்துநீங்கள்கூடிச்செல்லும் வழிதேடி யானும் பின்னேவருவேன். எ - று.

* திருக்கோவையார், செ உ௩௩.
† அம்பிகாபதிகோவை, செ. ௩௨௫.

நானம் - மான்மதம். மன்றல் - மணம். புணர்தல் - கூடல். இளை - சுற்றம். இன்னுமொழி-அலர்மொழி. 'மன்றலம் பூங்குழல்தஞ்சைவாணன் வையைச் சுழிநாறு முந்தி' எனக் கூட்டி ஆகுபெயராகக்கூறுக. (௩௧௫)

தலைமகளைத்தலைமகன்சுரந்துயித்தல்.

தலைமகளைத் தலைமகன் சுரந்துயித்தல் எ - து. ஐப்பந்து முன்றுநாள் தலைமகன் தலைமகளைச் சுரத்திறசெலுத்தல்.

---

தளிபோற் கொடைபயில் சந்திர வாணன் றமிழ்த்தஞ்சையான்
அளிபோற் குளிர்ந்த விளமரக் காவுமவன்புகழின்
ஒளிபோல் விளங்கிய வெண்மணல் யாறுமுவந்துகண்டு
நளிபோ தவிழ்குழ லாய்மெல்ல மெல்ல நடந்தருளே.

இ - ள். குளிர்ச்சியையுடைய மலர் முருக்கவிழப்பட்ட குழலையுடையாய்! மேகம்போற்கொடுக்குந் தொழில்பழகிய சந்திரவாணனுடைய தமிழ் விளங்கப்பட்ட தஞ்சையான அன்புபோல்குளிர்ந்த இளமரச்சோலையும் அவனது புகழினொளியைப்போல வெண்மணல் செறிந்தகான்யாறும் கண்டுமகிழ்ந்து மெல்ல மெல்ல நடந்தருள்வாயாக. எ - று.

தளி-மேகம். பயிலுதல்-பழகுதல். அளி-அன்பு. கா-சோலை. ஆறு-கான்யாறு. உவத்தல்-மகிழ்தல். நளி-குளிர்ச்சி. 'கண்டுவந்து' எனஇயையும்.

தலைமகன் றலைமகளாசைவறிந்திருத்தல்.
(இது வெளிப்படை.)

அசைவு-வருத்தம். அன்புகொண்டமடப்பெடையசைஇயவருத்தத்தை என்றார் பிறரும். அசைஇய-வருந்திய.

---

வரமாமை வேற்படை வாணன் றென்மாறை வணங்கலர்கள்
புரமான வல்லழல் பொங்குவெங் கானிற் பொருந்தியகூர்
அரமான கல்லுன் னடிமல ராற்றல வாதலினும்
சுரமாறு மெல்லைநல் லாயிருப் பாமிந்தச் சோலையிலே.

இ - ள். நல்லாய்! வரத்தையுடைய மாமைநிறம்பொருந்திய வேற்படையையுடைய வாணன்தென்மாறையை வணங்காதார் நகளைப்போல்வலிய அழல்பொங்கியெழும் வெய்யக்காட்டில்கூர்பொருந்திய அரத்துககொப்பானகற்கள் உன்அடிமலர் பொறுக்குந்தன்மையவல்ல; ஆதலால், சுரமாறுமளவும் நாம் இந்தச்சோலையிலே யிருப்பாம். எ - று.

மாறை குருதிப்புள்ளிறம். 'வரமாறைவேற்படை வாணன்' என்று பாடமோதிப் பெருமையுஞ் சுடாமையுமுடைய வேற்படையெனப்பொருள் கூறுக. 'சுடாபொருநதிய' என இயையும். அரமானனன்புழிச வமைத்தொகை, புரமான - புரமுபோல. ஆறறல - பொறுததல். † 'ஆற்றுவாராற்றல் பசி யாறறல்' எனறாபிறரும.

சுரம-வழி. ஆறுதல் - வெப்பமதணிதல். எல்லை அளவு. (௲௧எ)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந்துரைததல் எ - து. தலைமகளை மகிழ்ந்து அவள்கூந்தற்கு அலரைச்சூட்டி அதனால பரவசமகிழ்ச்சியடைந்து கூறுதல். உவகை அறிவொடுகூடியது, மகிழ்ச்சி யறிவழிந்தது. என்னை, - ‡ "உள்ளககளித்தலுங் காணமகிழ்தலுங, கள்ளுககில் காமத்திற்குணடு." என்னுங குறட்குப்பரிமேலழகர் உரையானுமுணர்க.

---

அடிமலர் போற்றவும் போற்றியன் பாலிவ ளாய்முடிக்கியான்
கடிமலர் சூட்டவுங் காட்டிய தாற்கள்வா காய்ந்தெறியும
துடிமலா சீக்கெதிா கூகை யிரட்டுஞ் சுரத்திடையோர்
வடிமலா வேற்படை யான்வாணன் மாறையென் மாதவமே.

இ - ள். களர்யா னைததடிக்குந் தடியின்கண் விரிவாகிய தாளவோசைக்கு எதிராகக் கூகையொலிக்குங் காட்டிடை ஒப்பற்ற கூர்மை விரிந்த வேற்படையுடையவாணன் தென் மாறைநாட்டிலிருக்கின்ற என்னுடைய மாதவம இவளடிமலரைப்போற்றவும போற்றி அன்பால் இவளாய்ந்துமுடித்த கொண்டைக்கு யான் மணமலரைச்சூட்டவும காட்டியது. எ - று.

கடிமலர்-மணமலர். காய்தல்-சினததல். எறிதல்-அடித்தல், துடி - பாலைநிலத்துப்பறை. மலர்தல்-விரிதல. சீர-தாளவோசை. இரட்டுதல்- ஒலித்தல். சுரம-காடு. வடி-வடிததறறெழில். (௲௧அ)

கண்டோரயிர்த்தல்.

கண்டோரயிர்த்தல் எ - து. வடிவின்மேம்பாட்டாற் கண்டோரைய முறக்கூறுதல.

---

சையத் திரள்புயன் சந்திர வாணன தண்சிபுரக்கும்
வையத் துறைகின்ற மானிட ரோவன்றி வானவரோ
ஐயப் படுமழல வெஞ்சுரத் தூடுநடந் தவரென்
றையப் படுவதல லாலுண மைசால வறிவரிதே.

---

† திருக்குறள், சே. ௨௨௫.
‡ ௸, சே. ௲௨அ௧.

இ - ள். வருகின்றோர் உளம்வையம் பாலை அழல்படும் வெய்ய சுரத்தில் நடந்த இவர் மலைபோல்திரண்டபுயத்தையுடையவனாகிய சந்திரவாணன் ஒப்பிலாது காத்தளிக்கும் புவியின்கண் உறைகின்றமானிடரோ? அல்லது வானுலகின்கணுள்ளவரோ! என்று ஐயப்படுதல்லாமல் உண்மையை மிகவும் அறியவரிது. எ - று

வையம் - மலை. திரள்புயம் - வினைத்தொகை. புரத்தல்-காத்தல். வையம் - புவி. 'அழலபடும்' என இயையும். சால-மிகவும். (௩௧௯)

கண்டோர்காதலின்விலக்கல்.

கண்டோர்காதலின் விலக்கல் எ - து. கண்டோர்காதலினால்போக்கை விலக்கி எம்பாடியிற் றங்கிப்போமென்று கூறுதல்.

---

கண்டோராவார் - பாலைநிலத்தெயிறறியர். ஆடவர் கண்டோரெனில் வருங்குற்றமெனின், 'செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டு கேட்டல்' என்னுங் கிளவிச்செய்யுளில் யான்தலைவனைக் கண்டேனெனின் காதலி தலைவியைக் கண்டாள் என்பதனோடு மாறுபடுமென்றுணர்க.

---

மாலுந் திருவு மெனவரு வீர்தஞ்சை வாணன்றெவ்வூர்
போலுஞ் சுரமினிப் போகவொண் ணாது பொருப்படைந்தான்
ஆலும் புரவி யருக்கனிக் கங்கு லடற்கடமான்
பாலுந் தசையுமுண் டேதங்கு வீரெங்கள் பாடியிலே.

இ - ள். மாலுந்திருவுமென்று சொல்ல வருவீர்! தஞ்சைவாணன் பகைவரிருக்கும் ஊர்போலும் பாழாகிய சுரம் இன்று இயலிடம் விட்டு அப்பாற்போகத்தகாது. ஆரவாரஞ்செய்யும் புரவி பூட்டிய தேரில்வரும் அருக்கன் அத்தவெற்படைந்தான். இருள்வருங்காலமாகிய இக்கங்குலில் போர்செய்யும் கடமான்பாலும் தசையும் யாங்கள் தருதும், அதனையுண்டு எங்கள்பாடியில் தங்குவீர். எ - று.

தெவ்வூர் பாழாய் மக்களியக்கமின்றியிருத்தலின் சுரம் உவமையாயிற்று. 'அருக்கன் பொருப்படைந்தான்' எனக் கூட்டுக. ஆலுதல்-ஆரவாரித்தல். அடல் - போர். (௩௨௦)

தன்பதியணிமைசாற்றல்.

தன்பதியணிமைசாற்றல் எ - து இவ்விடத்தில [illegible]ரில் வைகிப் போதல்வேண்டுமென்று தலைவி கூறியவழித் தலைவன்தன்பதி அணித்தென்று கண்டோர் கூறுதல்.

பாங்கிசேவிலிக்குணர்த்தல்.

(இது வெளிப்படை.)

வெறுத்தா ரொறுத்துரை மேலுநம் கேளிர் விழைதலின்றி
மறுத்தா ரவற்கு மணமதற் றஞ்சை வாணர்பிரான்
கறுத்தார் புரத்து நடந்தனள் கானையின் காமர்கற்பால்
பொறுத்தா ளழற்சுரந் தன்னையன் னீப்பினை பொலங்கொடியே.

இ - ள். அன்னாய்! நின்பொலங்கொடி நமருற்றத்தார் வெறுத்தார்; அதன்றியும், ஒறுத்த சொல்லைச் சொல்லுதல் மேலும் விழைதலின்றி அத்தலைவற்கு மணத்தைமறுத்தார்; அதனால் தஞ்சைவாணர் குலத்துக்குப்பிரான் கோபித்த பகைவருராகியகாட்டில் காளையின் நடந்தனள், அழகியகற்பினால் சுரத்தழல் அன்னை பொறுத்தாள். எ - று.

ஒறுத்துரை-சினந்துப் பல்காற் கூறுதல். விழைதல் - விருப்பம். கறுத்தல்-கோபித்தல். காளை-பாலைநிலத்துத் தலைவன். காமர்-அழகு. 'மணத்தை மறுத்தார்' எனவும், 'சுரத்தழறன்னை' எனவும் இயையும். (௩௨௪)

பாங்கியினுணர்ந்தசெவிலி தேற்றுவோர்க்கெதிரழிந்து கூறல்.

(இது வெளிப்படை.)

அழிந்து கூறல் - சோர்ந்து கூறல்.

மாறா வளவயல் சூழ்தஞ்சை வாணனறென் மாறையென்கண்
ஆறா வருந்துய ராற்றுகின் றீரறி வேகொளுத்தி
ஊறா வனகடிந் தென்முலை யூறமிர் தூட்டியினசொல்
கூறா வளர்த்தற கோல்வளை நீத்ததென் கோலவளையே.

இ - ள். வளமாறாத வயல் சூழ்ந்த தஞ்சைவாணன் தென்மாறையில் என்னிடத்தில் ஆறாத அருந்துயராற்றுகின்றவரோ! அறிவைப்பொருந்தித் துன்பமானவை கடிந்து என்முலையிலூறும் அமிழ்த்ததை யூட்டி இனியசொல்லைக்கூறி அரிதாய வளர்த்ததறகோலனழகிய வளையையுடையாள் என்னை விட்டுநீங்கியது! எ - று.

'வளமாறா' எனஇயையும். ஏகாரம்-ஈற்றசை. கொளுத்தல்-பொருந்தல். ஊறு-துன்பம். கூறா-கூறி. நீத்தல் - துறத்தல். கோல்வளை - ஆகுபெயர். கோலம்-அழகு. கோல் எனக்கடைக்குறை. கோல்வளையிற் புள்ளியென் பாருமுளர். (௩௨௫)

## செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

செவிலி தன்னறிவின்மை தன்னை நொந்துரைத்தல் எ - து. தலைவி போதற்குத் தான் குறிப்பினால் அறிவித்ததனைமையை யறிந்திலே னென்று தன்னறிவின்மை தன்னைத்தெளிந்துகூறல.

---

வழியா வருமபெரு நீர்த்தஞ்சை வாணனை வாழ்த்தலர்போற்
கழியாத வன்புடைக் காளைபின் னாளொரு கலந்துகொண்டல
பொழியாத வெஞ்சுரம போகுவல யானென்று போங்குறிப்பால்
ஒழியாதென முன்புசொன னாள்பேதை யேன்றுணறை யோர்ந்தில
[னே.

இ - ள். வாய்க்கால் நிறைந்து வழிந்துவருமபெரிய நீர் சூழ்ந்த தஞ்சைவாணனை வாழ்த்தாத பகைவர் போல நீங்காத அன்புடைய காளை பின்னே நாளைகலந்து ஒருககாலும காரொந்து பெய்யாத வெவ்வியகாட்டில் யானபோகுவலென்று போங்குறிப்பையெல்லாம விடாது என்முனபு சொன னாள்; யானறிவிலேன ஆதலால், ஒன்றையும ஆராய்ந்தறிந்திலேன. எ - று.

வழியா - வழிந்து. கழியாத - நீங்காத ஒழியாது - விடாது. ஆல் - அசை. ஒன்றையும் என்புழி சிறபபுமமை விகாரத்தாற் றொக்கது. (௩௨௬)

## செவிலிதெய்வம்வாழ்த்தல்
(இது வெளிப்படை)

இணங்கிய புவனத் தெவருமில லாவென வின்னங்கொடியால
உணங்கிக கழிதல் லொழியவென் பாலவர வுன்னையன்பால
வணங்கிப பலமுறை வாழ்த்துகின் றேனறஞ்சை வாணன்றெய்வ
அணங்கித திரள்புயத தானமல யாசலத தாரணங்கே.

இ - ள். பகைவரை வருத்திய வதருற பூரித்தத திரண்டபுயத்தை யுடையவனாகிய தஞ்சைவாணனது பொதிய மலையிலிருக்கின்ற அரியதெய் வமே! இப்புவனத்து நடபுக்கூடுதற்கு எவரும இல்லாத என்னிளங்கொடி போல்வாள வாடிப் பாலைவனத்துப போதலையொழிய என்னிடத்துவர உன்னை அன்பாற் பலமுறை வணங்கித்துதிக்கின்றேன; வரின் நினக்குச் சிறப்புச்செயவேன.

இணங்கல் - இணங்கெனத்திரிந்துநின்றது, *"காப்பினொப்பினூர்தியி னிழையின்" என்னும வேற்றுமையியற் சூத்திரத்தின் இழைத்தல் எனனும் சொல் இழை என நின்றாற்போலக் கொள்க. உணங்கி - வாடி. கழிதல்- போதல். அணங்கி-வருத்தி. மலையாசலம்-பொதியமலை. ஆரணங்கு - அரிய தெய்வம். 'வரின்நினக்குச் சிறப்புச்செய்வேன்' என்பது அவாய்நிலையான் வந்தது. இவை மூன்றுகிளவியும செவிலிபுலமபற்குரியவாமென்க. (௩௨௭)

---

* தொல். சொல். வேற்றுமையியல், சூ. ௭௨.

செவிலிநற்றாய்க்குணர்த்தோடுநிற்றல்.

செவிலிநற்றாய்க்குணர்த்தோடுநிற்றல் எ - து. செவிலி நற்றாய்க்கு உடன் போக்கை வெளிப்படுத்திக் கூறல்.

---

சகதல்க வந்தருள சந்திர வாணனறென் றநுசைநலலாய்
முகநலகி நலக மூலைகொடுத் தாரினமுத் தங்கொடுத்தார்
மிகநலல மென்பது மன்பதைத் தேர விடலைபின்னே
மகநலகு மந்தியங் கானடந் தாளுன் மடந்தையின்றே

இ - ள். உலகத்தில மகிழ்ச்சி கொடுக்கவந்தருளப்பட்ட சந்திர வாணனது அழகியதஞ்சையிலிருக்கின்ற நல்லாய! முகங்கொடுத்து மேலே சகு மகிழ்ச்சியள் கொடுக்கவெண்ணி மூலைகொடுத்தாரின இன முத்தங் கொடுத்த கணவரோ மிகநலலமென்பது உலகத்து மக்களெல்லாந் தெளிய உன்மடந்தைஇன்று மகப்பெறு மந்திகளுறைபங்குங காட்டில்விடலைபின்னே நடந்தாள். எ - று.

சகம் என்புழி ஏழுனுருபுதொக்கது. நல்லாய் - நற்றாய். மன்பதை-மக்கட்கூட்டம். தேற-தெளிய மந் - குரங்குக்குட்டி. ‡ "கோடுவாழ்குரங்குங் குட்டிகூறுப." ‡ "மகவும பிள்ளையும பறழும பார்ப்புமவையுமனைவப் பாலன." என்பதனுணர்க. மந்தி-பெண்குரங்கு. ‡ 'குரங்கு முசுவு மூகமு மூன்றும." என்பதனுணர்க. கானம்-காடு. (௩௨௮)

நற்றாய்பாங்கியோடுபுலர்பல்.

(இது வெளிப்படை,)

முன்னே யிதனை மொழிந்தனை யேனுநந்தை மூநதைமணம
பின்னைய் குழலி பெறுளலல ளேபிறழா தெவாக்குந
தன்னையம வைத்தருளுந்தஞ்சை வாணன றமிழ்ச்சிலம்பில
பொன்னே யனையநல லாயவ மேசுரம போக்கினையே.

இ - ள். எவர்க்கும் நிலைவிட்டுப் பெயராது தன்னுடைய அன்பை வைத்துக்காக்கும் தஞ்சைவாணன் பொதியமலையிடத்துப பாற்கடற்பிறந்த மடவார் பலருள்ளும திருமகளை பொன்னனைய நல்லாய்! சுரம்போவதற்கு முன்னமே இதனைமொழிந்தாயாகின் நந்தைநதை முற்காலத்தில் என்னை மணஞ்செய்தது போலப் பின்னுதல் பொருந்திய குழலையுடையாள மணம் பெறுவாளே! இச்செய்தியை என்னுடன் சொல்லாமல் மகளை வீணேசுரத்திறபோக்கினையே! எ - று

---

‡ தொல், பொருள், மரபியல், சூ. ௩௩, ௧௪, ௨௨.

நுந்தை - நுந்தந்தை. முந்தை-முன்பு. மணம் என்புழி உம்மைத்தொகை. பிறத்தல்-பெயர்தல். நேயம்-அன்பு. போயினனே என்புழி ஏகாரம் பிரிநிலை, அவருடன் பிறந்தார் பலருள்ளும் அவனையே பிரிந்து வாடுதலின். அவ்வயி-னேமி. சுரம்-கானம். (௩௨௯)

அது கேட்டபாங்கியழுங்கல்கண்டு நற்றாய்புலம்பல்.

(இது வெளிப்படை.)

இல்லுங் கழங்கா டிடங்களு நோக்கி யிரங்கல்வம்பும்
வல்லும் பொருங்கொங்கை மங்கைநல் லாய்தஞ்சை வாணனொன்னார்
புல்லுந் துணைவியர் போல்வினை யேன்பெற்ற பூவையன்னாள்
செல்லுஞ் சுரத்தழ லன்றுன்கண் ணீரொற் றெறுகின்றதே.

இ - ள். கச்சும் சூதும் தம்முட்பொருங் கொங்கையையுடைய மங்கை நல்லாய்! தஞ்சைவாணனுக்குப் பகையாயினோர் கூடும் துணைவியர்போலத் தீவினைசெய்தேனாயான் பெற்றபூவைபோன்ற மகள் அருந்திச்செல்லும்பாலைச் சுரத்திலெழுந்திருக்கும் அழலன்று, அழுகின்ற கண்ணீரே யெனைச்சுடுகின்றது; மகள் இயங்கிநின்ற மனையையும் அவள் கழங்காடுகின்ற இடங்களையும் நோக்கி நீ அழுதக. எ - று.

கழங்காடுதல்-கழங்கா யேழு கைப்பிடித்தாடுதல். இரங்கல்-அழுதல். வம்பு-கச்சு. வல்லு-சூது. வம்பும் வல்லும் பொருதல் மேன்மேலாடும் பாகக வருங்கால் வந்தே மறையாக என்புழி நீ யெப்பாகமென்று வம்பு விலக்குழி ஒன்றோடொன்று பொருதலாயிற்று. தெறுதல்-சுடுதல். (௩௩௦)

நற்றாய்பாங்கியரோடுபுலம்பல்.

(இது வெளிப்படை)

நேயம் புணைதுணை யாகவெங் கானக நீந்தவெண்ணி
ஆயம் புலம்ப வகன்றனள் மீளாக்கல் லகங்குழைய
மாயம் புகன்றொரு காளையின் வாணன்றென் மாறையன்னீர்
சேயம் புயமலர் போலடி நோவவென் சில்வளையே.

இ - ள். வாணன் தென்மாறைநாடுபோன்ற பெண்காள்! கல்லும் நெஞ்சங்குழையப் பொய்சொல்லப்பட்ட வொருகாளையின் எனது சில்வளையையுடையாள் சிவந்த தாமரைமலரையொக்கும் அடிகள்நோவ வெவ்வியகாடாகிய வெள்ளத்தை நீந்தவெண்ணி அன்பினைத் தெப்பமுந்துணையுமாக ஆயக்கூட்டம் புலம்பப்பிரிந்து போயினள். எ - று.

நேயம்-அன்பு. புணை துணை என்புழி உம்மைத்தொகை. நீந்தல் என்பதனால் வெள்ளம் வருவிக்கப்பட்டது. ஏகாரம் ஈற்றசை. கல் என்புழி சிறப்பும்மை தொக்குநின்றது. "குன்றி-னெஞ்சுபகவெறிந்த வெஞ்சுடர் நெடுவேல்" என்பதுபோலக் கற்கு நெஞ்சு கூறினொன்றாக. மாயம்-பொய். அம்புயம்-தாமரை. சில்வளை - ஆகுபெயர். (௩௩௧)

### நற்றாய் அயலார் தம்மொடுபுலம்பல்.

(இதுவெளிப்படை)

மேனாள் வரங்கிடந் தெனைப்போல வருந்தி மிகவுமெய்ந்நொந்
தீனா தவர்துன்ப மெய்துவ ரோவிமை யோருலகந்
தானாண நீடு மதிற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பின்
மானார் விழியனை யாள்விளை யாடிய வண்டலங்கண்டே.

இ - ள். தேவருலகத்தார் நாண நீண்ட மதில்சூழ்ந்த தஞ்சைவாணன் தமிழ்ச்சிலம்பில் விழிமான்போன்றவள் விளையாடிய வண்டலம்பாவையைக்கண்டு பண்டைநாளில் வரங்கிடந்து என்னைப்போற் பத்துமாதஞ் சுமந்து வருந்தி மிகவும் மெய்நொந்து பெறாதார் துன்பம் எய்துவரோ? யானும் பெறாதிராது பெற்றுத் துன்பத்தையே யெய்தினேன். எ - று.

மேனாள் - பண்டைநாள். ஈனாதவர் - பெறாதவர். வண்டல் - ஆகுபெயர். (௧௧௨)

### நற்றாய்த்தலைமகள்பயிலிடம்தம்மொடுபுலம்பல்.

நற்றாய்த் தலைமகள் பயிலிடம் தம்மொடு புலம்பல் எ - து. நற்றாய் தலைவிபழகி விளையாடுமிடங்களோடு நொந்துகூறல்.

---

செயலைத் தருவின் வருநிழ லேபெருஞ் சிற்றிலமே
வயலைக் கொடிநொச்சி மண்டப மேதஞ்சை வாணனொன்னார்
இயலைத் தனித்தனி தந்தன ளோடயக் கின்றிதன்றே
கயலைப் பொருதகண் ணாண்மேலும் வாழ்விக்குங் கட்டளையே.

இ - ள். அசோகத்தருவின் அழகிய நிழலே! பெரிதாய்வளர்த்த சிற்றிலமே! வெளியிலே செய்த கொடிகட்டிய மதிலசோந்த மண்டபமே! தஞ்சைவாணனுக்குப் பகைவரிலக்கணத்தை நமக்கின்று தனித்தனி தந்தாள் கயலுடனே போர்புரிந்தகண்ணாள், இனிமேலும் நம்மை வாழ்விக்கும் கட்டளையிதுவன்றோ! எ - று.

செயலை-அசோகு. திரு-அழகு. பெருஞ்சிற்றில்-அவரவர் விளையாடுஞ் சிற்றில் அறப் பெரிதாய் வளர்ந்தசிற்றில். வயலை-வெளி. நொச்சி - மதில். 'தனித்தனிதருதல்' பகைவர் பலராதலால் அவரவர்படுந்துன்பங்களை வேறு வேறு கொடுத்தல். மேலும்-இனிமேலும். கட்டளை - முறைமை. இவை ஐந்தும் நற்றாய்ப் புலம்பற்குரியவாமெனக். (௧௧௩)

## நிமித்தம்போற்றல்.

வடியேய் புகர்முக வாள்வல வாணன்றென் மாறையுள்யான
அடியே தொழுதெய்வ மாகநிற் பேணி யரும்பலியிப்
படியே தருகுவ லென்றுமின் னேயிப் பதியுவகைக்
கொடியே வரக்கரை நீகொடி யேன்பெற்ற கொம்பினையே.

இ - ள். இப்பதியிடத்து மகிழ்ச்சிகொண்டிருக்கின்ற காகமே! பாவியாகிய யான்பெற்ற கொம்புபோல்வாளை என்வேர நீயழையாய், அழைத்தவுடனே வருவள், அவள்வந்தால் வடித்ததொழில்பொருந்திய புகர்நிறத்தை முகத்திலுடைய வாட்டொழில்வல்ல வாணனது தென்மாறையுள் யானை வழிபடுகடவுளாக நின்னைப்போற்றி, சோறுதசைமுதலிய அரியபலியை இன்று கொடுத்தாற்போல என்றுந் தருவேன் எ - று.

வடி - வடித்ததொழில். புகர் - இரத்தக்கறைப்புள்ளி. அடிதொழுந்தெய்வம் - வழிபடுகடவுள். பேணி - போற்றி. அரியபலி - கிடையாதபலி. இன்னே-இப்போதே. கொடி - காகம். கரைதல்-அழைத்தல். காகமழைத்தல் [illegible] போயினோர் வருவரென்னும் உலகியல்புபற்றிக் கூறினளென்றுணர்க. இன்னேகரைவென இயையும். (௩௩௪)

## சுரந்தணிவித்தல்.

சுரந்தணிவித்தல் - து. சுரத்தின்வெம்மை குளிருமாறுகூறுதல்.

வெந்தசுர நாடு வியன்சுர லோகமும் வெங்கடுங்கான
ஐந்தரு தாரு வனங்களு மாக வகிற்புகைபோல
மைந்தர வாட்க மாபதிற் சூழ்தருசை வாணன்வெற்பிற்
பஞ்சுர மாகு மொழிச்சுருள் ளோதியென் பைந்தொடிக்கே.

இ - ள். அகாகரிலுள்ளார் குழறுகூட்டும் அகிற்புகைபோன்ற முகில் தவழப்பட்ட வலியபொன்மதில்சூழ்ந்த தஞ்சைவாணனது வெற்பிடத்துப் பஞ்சுரமென்னும் பண்ணைநிகர்த்ததாகிய மொழியையும், சுருண்ட குழலையுமுடைய என்பசிய தொடியையணிந்தாட்கு வெய்யபாலையுலகும், விரிவாகிய தேவருலகும், வெய்யகடியகாடும், அத்தேவருலகிலுண்டாகிய பஞ்சதருச்சோலையுமாம். எ - று.

சுரநாடு-பாலையுலகம். வியன்-விரிவு. ஐந்துசுரதருவாவன - சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். பஞ்சுரம் - பாலைநிலத்துப் பண். ஓதி-குழல். மொழிச்சுருளோதி உம்மைத்தொகை. பைந்தொடி - அன்மொழித்தொகை. (௩௩௫)

## தன்மகள்மென்மைத் தன்மைக்குஇரங்கல்

தன்மகள் மென்மைத்தன்மைக்குஇரங்கல் எ - து. நற்றாய் தன்மகள் மெல்லிய இயல்பாகிய தன்மைக்கு இரங்கல்.

தாமே தமக்கொப்பு மற்றில லவர்தில்லைத் தண்ணனிச்சப
பூமேன் மிதிக்கிற் பதைத்தடி பொங்குநங் காயெரியுந
தீமே லயிலபோற் செறிபரற் கானிற் சிலம்படிபபாய்
யாமே நடக்க வருவினை யேன்பெற்ற வமமனைக்கே. (௩௩௬)

¶ [இதுபிறசெய்யுட்கவி.]

## இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.

இளமைத்தன்மைக்குளமெலிந்திரங்கல எ - து. நற்றாய தலைவியிள மைத்தன்மைக்கு மனமெலிந்திரங்கிககூறல்.

இரும்பா மனங்கொண்ட வாறெனனை நீதன்னை யேத்தியென்றும்
வரும்பா வலாக்கருள் வாணன்றென் மாறை வளவயலில
கரும்பார மொழியா யழுலென்று கண்ணீா துடைத்தணைத்துன்
அரும்பா முலைசெய்ப வாயபபசும பாவைக களிக்குமின்னே.

இ - ள். விளையாடுமே பாவையை நோககித தன்னைத்துதித்துவரும புலவர்க்கு என்றும் அருளபபட்ட தென்மாறை நாட்டுவளவயலில வளருந கரும்புபோன்ற மொழியினையுடையாய! அழாதையெனறுகணணீர்துடைத தணைத்து உன்மாரபில் அருமபாதமுலையைச செய்யவாயையுடைய பசும் பொன்னாறசெய்த பாவைக்களிக்கும இளமைத் தன்மையையுடைய மின் போன்றவளே! என்னைவிட்டுப்பிரிந்துபோக நீ இரும்பையொக்கும் மனங் கொண்ட முறைமை எப்படி? எ - று.

பாவலர்-புலவா பசும்பாவை என்றதனால பொன்வருவிக்கப்பட்டது மின் - ஆகுபெயர். (௩௩௭)

## அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்.

அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரஙக ் எ - து. நற்றாய்தலைவியது வெருவுந் தன்மையை நினைநது தானச்சமுற்றிரஙகுதல

நாண்மா தவிமலா நாறிருங கூந்த லடந்தவழிக்
கோண்மா குமிறுங் கொடுங்குரல கேட்டொறுங் கூாங்கணையால
வாண்மா முனைவென்ற வாணனறென் மாறை மணிவளைவேய்த
தோண்மா வெருவுங் கொலலோ வென்றெ ஞருயிர் சோாகின்றதே.

---

¶ திருக்கோவையார், செ. ௨௨௮.

இ - ள். குருக்கத்தியினது முருக்கவிழ மலர்மணக்குங் கரியகூந்தலை யுடையாள் நடந்த பாலைவழியில் கொலைசெய்யும் விலங்குகள குமிறப்பட்ட கொடிய குரலைக்கேட்குந்தோறும் கூரிய கணையினுல் வாளபிடித்துவரும் பெரியபகையைவென்றவாணன் தென்மாறைநாட்டிலிருக்கின்ற மணிவிளை யும வரையிடத்துண்டாகிய வேய்போலுநதோளையுடைய நீருப்போல்வாள் அஞ்சுமோ வென்று என்னுயிராவாடுகின்றது. எ - று.

'மாதவிநாண்மலா' எனஇயையும். மாதவி-குருககதகி. கோள்-கொலை. மா-விலஙகு. குமிறுதல-சினதது முழஙகுதல், கேட்குந்தோறும் என்னுஞ் சொல் கேட்டோறும்என விகாரப்பட்டுநின்றது. முனை-பகை. வெருவுதல்-அஞசுதல். சோாதல்-வாடல.

இவை ஐநதும மனமருட்சிக்குரியவாமாறு காண்க (௩௩அ)

### கண்டோரிரக்கம்.

இரஙகல்-அழுஙகல்.

நொநதுங் கலுழ்நதுந் துணைவிய ராற்றலர் நோகமொழின்சொல்
தநதுங கவையுந தணநதுசென றுளெனத் தாள்பணியார்
மைநதுங கதமுங கடிந்தருள வாணன்றென் மாறையன்னுள்
பந்துங கழங்குமெல லாங்கணடு வாடும் பயநதவளே.

இ - ள். தம்மிடத்துப்பாாக்குங் குளிாந்தபாாவையோடு இனியசொல் தந்ததனையும் அயலார் அறறும அலனைமவிட்டு நீக்கிச்சென்றுளென நொந்தும கலுழ்ந்தும் துணைவியராறறலா, தாள்பணியாதார் வலியையும் சினதனதயுமபோக்கிய வாணன் தெனமாறையனனுள விளையாடிய பந்தும் கழஙகும் மறறுமுள்ளனயாவையும கண்டு பயநத அவள்வாடும். எ - று.

கலுழ்தல்-அழுதல.'நோக்மொழின்சொற்றநத,தற்குநொநதுங்கவையை ததணநததற்குக் கலுழ்ந்து மாற்றலராயினா' என நிரனிறையாய்ப் பொருள் கொள்க. தந்ததும் என்பது தநதும் என விகாரப்பட்டு நின்றது. †பாலொடுதேன்கலநதறறே' என்புழி 'கலநதற்றே' என்பது கலந்தற்றே என நின்றுற்போற்கொளக. கவவை கவையென இடைக்குறை. தணந்து-விட்டுநீங்கி. மைநது-வலி. கதம்-சினம. பயநதவள்-ஈனறுள. (௩௩௯)

இஃதொன்றும் கண்டோரிரங்கற்குரித்து, கணடோர்-மாநதா் எனவுணர்க.

### செவிலிஆற்றுந்தாயைத்தேற்றல்

செவிலிஆற்றுததாயைததேற்றல எ - து. செவிலிஆற்றாத நற்றுயைத் தேறுமாறு கூறுதல.

† திருககுறள், சே. ககஉக.

நன்றே யிதென்று முகமுக நோக்கி நகைநகையா ம
அன்றே யலர்சொல்லு மாதா முனனே தஞ்சை வாணன்றொல்சீர்
சென்றே பரந்த திசைகளெல்லா ஞ்சென்று தேர்ந்தணங்கை
இன்றே தருவன் னேவருந் தாதிங் கிருந்தருளே.

இ - ள். அன்னே! இவர் ஒருவன் பின்னே சுரம்போயின இது நன்றாயிருந்ததென்று ஒருவர்முகம் ஒருவர்நோக்கி நகையைநகைத்து வெளியிலே அலர்தூற்றும் மாதாமுன்னே, தஞ்சைவாணனது பழகிய கீர்த்தி போய்ப்பரந்த திசைகளெல்லாம்போய்த்தேடி அணங்குபோல்வாளை இறைப்பொழுதே தருவேன். யான் போயவருமளவும் வருந்தாது இங்கிருந்தருள் எ - று.

முன் ஏகாரமூன்றும் ஈற்றசை, பின் ஏகாரமொன்றும் தேற்றம். 'நன்றேயிது' என்னுங் குறிப்புமொழி அசதியனை சினைதயுணர்த்திநின்றது. நகையா-நகைத்து. மன்று-வெளி. தேர்தல்-தேடல். அணங்கு-ஆகுபெயர் (௩௪௦)

### ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல் எ - து. செவிலி தேடிப்போங்கால் வழியிடை எதிர்வரு முக்கோலுடைய அந்தணரை வினவுதல்

ஒருவெண் குடையிரு நீழன்முக் கோல்கொண் டொழுக்கத்தினால்
அருவெங் களரியைச் சாரிசெல் வீரரு ளீரெழுபார்
மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையின் வஞ்சியன்னாள்
பொருவெஞ் சுடரிலை வேலொரு காளைபின் போயினளே.

இ - ள். ஒருவெண்குடையினது பெரியநிழலின்கீழே மூன்று தண்டு கொண்டு ஆசாரத்தினால் அரிய வெவ்விய களர்நிலத்தினைச் சாரிசெல்வீர்! எழுபாரினுமமருவியஎண்டிசையினுமுள்ளோராற் புகழப்பட்ட வாணனது தென்மாறைநாட்டிலிருக்கும் என்னுடைய வஞ்சிக்கொப்பு போன்றவள் போர்செய்யும் சுடர்பொருந்திய இலைபோலும் வேலையுடைய ஒருகாளை பின் போயினள்; மீண்டு வரக்கூறி அருள்புரிவீராக. எ - று.

இருமை - பெருமை. முக்கோல் - திரிதண்டு. ஒழுக்கம் - ஆசாரம். இயைந்து-பொருந்தி. ஆறு-வழி. 'மீண்டுவரக்கூறல்' அவாய்நிலையானவந்தது. ஒன்றுமுதலெட்டளவும் ஒழுங்காய்த்தொகை காட்டிவருதலால் செய்யுட்கு இஃதோரலங்காரந் தோன்றியவாறு காண்க. (௩௪௧)

### மிக்கோரேதுக்காட்டல்.

மிக்கோரேதுக்காட்டல் எ - து. செவிலி வினயதருக்கு மிக்கோர் அது உலகவியல்பென்று காரணமெடுத்துக்காட்டல்.

இ - ள். தருதற்குக் கொடியோடுகூடிய பதுமநிதியெனவந்த சந்திரவாணன்றரியலார்போங் காட்டில் மூங்கிலழல்பொருந்திய வழியிற்றனியே போன என்றோகைபோல்வாளை நீ இவ்விடைக்கண்டுழி இருள்போன்ற குழலாய்! இவ்வயலான்பின் செல்லற்கவென்று சொல்லாதகுரவே! நீமிகவுங் கொடியை. எ - று.

எனவே,—நீசொன்றால மீளாளல்லள்; வாளாவிருத்தல் அறவுங்கொடியையென்று கூறினாள். ஏதிலன் - அயலான். 'குரவேகொடியை' என இயையும். கொடை மிகுதியாற் கட்டிய கொடி வாணனமேலேற்றுக; கோநனகம்-பதுமநிதி. வேயழல் - மூங்கிலிற்பிறந்தவழல். தோகை - ஆகுபெயர். (௩௪௪)

சுவடுகண்டிரங்கல்.

சுவடுகண்டிரங்கல் எ - து. செவிலிநிலத்தினூடே காலழுந்திய குறியைக் கண்டிரங்கிக்கூறல்.

தொடுசிலைக் கானவ ரோடிய வேற்றுச் சுவடுவையே
அடுசிலைக் காளை யடியவை யேயறிந் தோரறிய
இடுசிலைப் பாரகத் தஞ்சை வாண னிசைக்குருகப்
படுசிலைப் பாவை பதமிவை பேவண்டு பாடகமே.

இ - ள். அம்புதொடுக்குஞ் சிலையையுடைய ஆறலைக்கானவர் எதிர்நிற்கமாட்டாதோடிய வேறுபட்ட அடிச்சுவடுவையே! அவரைப் பொருஞ்சிலையுடனே எமபுரப்பக்கத்தில் வீழ்த்துரத்திய காளையது அடிச்சுவடுவையே! தனதுவீரத்தை அறிவுடையோரறியச் சயத்தம்பநாட்டி உலகத்தைக் காக்குந்தஞ்சைவாணனது பொதியமலையிடத்திருக்கும் பாவையடியிவை எ-று.

எனவே,- அடிச்சுவடு கண்டவுடனே தலைவியை நினைந்திரங்கியவாறாயிற்று. பலராய் வந்தெதிர்ந்த தலைவனெதிர்நிற்கமாட்டாது ஒருவர் போனவழியொருவர் போகாதோடியோராது அடிச்சுவடொருவரடிபோலொருவரடியிராது வேறுபட்டுத் தோன்றுதலால் கானவரோடிய வேற்றுச்சுவடுவையென்றும், தனித்து நிற்றலினபாவைபதமிவையென்றும் கருதிக்கூறினாளென்க. இடுசிலை - வெற்றியாலிடுஞ் சயத்தம்பம். இசைக்குருகப்படுசிலை - இராவணன் பிணிக்கக் குறுமுனிபாடுமிசைக்கு உருகப்பட்ட பொதியமலை. பாடு-பக்கம். [illegible]குதல்-விழுதல். (௩௪௫)

செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

செவிலிகலந்துடன் வருவோரைக்கண்டு கேட்டல் எ - து. உடன்போக்குப்போய தலைவனும் தலைவியும்போல அன்புகலந்து ஆற்றிடை வருவோர் இருவரைக்கண்டு செவிலி வினாதல்.

யானகம் போத வருந்த நும போல்வனப் பெய்திவெய்ய
கானகம் போயினா கணடனி ரோகற்ப காடவிசூழ்
வானகம் போர்பயில் வானவற் கீந்தருள் வாணன்றஞ்சைத்
தேனகம் போருக மாதனே யாளுமொரா செலவனுமே.

இ - ள். கறபகக்காடு சூழந்த வானிடத்தைப் போாசெயயுஞ் சேர னுக்குக் கொடுத்தருளப்பட்ட வாணனது தஞ்சையின வாவியிலிருக்குந் தேனொளிவிடப்பட்ட தாமரையிலிருக்கும் மாதுபோலவாளும் ஒருசெல்வ னும் உங்களைப்போல அழகுபொருந்தி யான்நெஞ்சுமிகவருந்த வெய்ய காட்டிடத்துப் போயினா, நீஙகள்கண்டீரோ? சொல்வீராக. எ - று.

அகம்-நெஞ்சு. போத-மிக, வனப்பு-அழகு கானகம-காட்டிடம. கறப காடவி-கறபகக்காடு. வானகம-வானிடம. வானவன்-சேரன நகுதல-ஒளி விடல. (௩௯௬)

அவர்புலம்பநேற்றல்.

அவாபுலமபநேறறல் எ - து. செவிலியிரஙகிப் புலமபுதலை எதிாவந் தோா தேற்றிககூறல

யான்கணட வண்ணலு மெணணருங காதலி னோகியவென
மான்கண் டனகண மயிலகணட மாதரு மாதருமம்
தானகணட தணணளிச் சந்திர வாணன றரியலர்போம்
கானகணட மெய்குளி ரபொய்கை சூழ்தஞ்சை காணபர்களே.

இ - ள். யான காணபபட்ட தலைவனும என்னுடைய தலைவியாகிய மானையுவமை கணடாறபோலும கண்ணையுடைய இமமயிலபோன்றவள் கண்ட வெணணுதறகரிய காதலினால தலைவன்பின்போகிய மாதரும் பெரிய தருமததைக்கண்ட தண்ணளியையுடைய சந்திரவாணன்தரியலா செல்லும் காட்டைககணடவுடமபு குளிர இப்போது பொயகைசூழந்த தஞ்சையைக் காணபாரகள. எ - று.

'யான கண்ட வணணலு மென்மயிலகணட மாதரும்' என்று கூறவே, எனக்கவள்தோன்றுமலமறைநதனெனறான, இவளுமஅந்தனமையளாதலின், இவள அவனைக்கணடதாகவும தானவனைககண்டதாகவும கூறினா. மயில் ஆகுபெயர். தண்ணளி-அனபு. தலைவியை யான் கணடவெனறுகூறாது,என் மயிலகணட மாதனெனறு கூறியதெனனையெனின், தலைவன் காணுந் தன மையளலலள,தையலாரகாணுந்தன மையளல்லள.ஆதலால் இவவாறுகூறி னர் என்னை, †"மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற் - பலாகாணத் தோன்றன் மதி." என்னுந் திருக்குறளினுணாக. (௩௯௭)

† திருக்குறள், 1119.

## செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

செவிலிபுதல்வியைக்காணாது கவலைகூர்தல் எ - து. செவிலி தன் புதல்வியைக்காணாது துன்பமிகுதல்.

நாணினுந் தாரணி கற்புநன் றென்று நயந்துமுத்தம்
பூணினும் பாரமி தென்னுமென் பொன்னையிப் போதெனக்குச்
சேணினுஞ் சாரும்புகழ் வாணன்றென் மாறைமன் சேரலரைக்
காணினுங் காணவந் தோவரி தாலிந்தக் கானிடையே.

* இ - ள். நாணைப்பார்க்கவும் முல்லைமாலையணிந்த கற்பு நன்றென்பதனை விரும்பிச்சென்றாள், ஆதலால் முத்தாரம்பூணினும் பாரமென்று சொல்லும் மெல்லியவியல்பினையுடைய என்பொன்னை எனக்கிப்போது சேணினுஞ்சேர்ந்த புகழையுடைய வாணனுடைய தென்மாறை மன்னன் பகைவரை இந்தக் கானிடைக்காணினுங் காணவரிது, அந்தோ யானென் செய்வேன் எ - று.

நயந்து என்புழிச் 'சென்றாளாதலால்' என்னுஞ் சொல்வருவித்து முடிக்க. 'எனக்கிப்போது' என இயையும். சேண் - தூரம். காணினும் என்னும் உம்மை அவ்வாறு ஆராய்ந்து திரிதலின் அருமை தோன்ற நின்றது. அந்தோ - இரக்கக் குறிப்பு. ஆல் - அசை. (௩௪௨)

கற்பொடு புணர்ந்தகவ்வை முற்றிற்று.

---

## மீட்சி.

---

மீட்சி எ - து மீண்டுவருதல். செவிலி புதல்வியைக்காணாது மீண்டு வருதலும், உடன்போய தலைவனும் தலைவியும் மீண்டுவருதலும் அடங்கப் பொதுப்பட மீட்சியென்று கூறினார்.

† 'தெளிந்தனமகிழ்ச்சிவிளிதல் செப்பலென, வெளிப்படவுரைத்த மீட்சிநால்வகைத்தே'.—என்னுஞ்சூத்திரவிதியால் மீட்சி நால்வகைப்படும்.

## தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குணர்த்தல்.

வாடா மலர்க்குழல் வல்லியை யன்னை பிறந் தீவினையேன்
நாடா விடமில்லை ஞாலத் தகலவயி னகமலர்க்
காடார் பழனக் கழனிநன் னாடுகடந்து தன்னூர்
வாடா வளமனை கொண்டுசென் றானொரு வள்ளலின்றே

[இது பிறசெய்யுட்கவி]

அகப்பொருள் விளக்கம், வரைவியல், சூ. ௧௧.

## தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

*தலைவன்றம்மூர் சார்ந்தமைசாற்றல். எ - து. ஐம்பதது நான்காநாள் தலைவன்மீட்சியில் தலைவியதூரைத் தாம்சார்ந்தமை தலைவிக்குச்சாற்றல்.*

---

நினையா னெதிர்ப்பட்ட நீடுருங் குன்றிது நீகுடைந்த
சுனையா மதுமலர்ச் சோலைக ளாமுவை தூயவண்டல்
மனையா மிவையினி வாணன்றென் மாறையை வாழ்த்தலர்போல்
இனையா தெழுந்தருண் மானனை யாயநம் மெழினகர்க்கே.

இ - ள். மானனையாய்! நின்னை யான் முன்னெதிர்ப்பட்ட நீண்ட பெரிய குன்றிது, நீ குடைந்துவிளையாடிய சுனையாமது, நீவிளையாடியமலர்ச் சோலைகளாமுவை; மாசிலாத வண்டலயர்பாவைசெய்து விளையாடிய சிற்றில்லமிவை, இன்று வாணனதெனமாறையை வாழ்த்ாதவர்போல வருந்தாது நமதெழிலையுடைய நகர்க்கெழுந்தருள் எ - று.

தான் அவள் என்னும் வேற்றுமைப்படாமையான் 'நமதெழினகர்' எனக் கூறினான். இனி-இன்று. இனையாது-வருந்தாது. (௧௫௦)

## தலைவிமுன்செல்வோர்தம்போக்குத்தாயர்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

(இதுவெளிப்படை.)

புனையல ரேதிலா காதலர் தாயர் பொறையிறப்போய்
இனைதுயர் யாதொன்று மின்றிவெங் கானகந் நீயானுமப்பொன்
வனைகழ லோனும் வருவதெ லாந்தசென் றுவாணன்றஞ்சைச்
துணைவுட னேகுகின் றீர்சொல்லு வீரொன் றுணைவியர்க்கே.

இ - ள். வாணன்றஞ்சைச் பிணைவுடன் செல்கின்றீர்! புனைந்த அலராத் தூற்றுகின்ற அயலாராமேதிலர்தருக காதலையுடையராகிய தாயர் இவர்கள் பொறுமையிறப்பப்போய துன்பம் ஒன்றுமின்றி வெய்ய காட்டைநீங்கிப்போய பிணைபோலும் அறிவையோளும் வனைந்த கழலையுடையானும் வருகின்றனர் என்று துணைவியர்க்குச் சொல்லுவீர். எ - று

புனைதல்-இல்லதனையுண்டாக்கிக் கூறுதல். ஏதிலா-அயலார். இனைதுயர் - வருந்துந்துயர். இகந்து-நீங்கி. துணைவு - விரைவு. * "கதழ்வுந் துனைவும் விரைவுப்பொருள." என்பதனுற்கண்டுகொள்க. (௧௫௧)

## முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

(இதுவெளிப்படை.)

போதலர் தல்லை முனியுமெல் லோதிப் புனையிழைதன்
காதலன் பின்வரக் கண்டன மியாங்கண்டல் வேலிமுன்னீர்
மாதலந் தன்னிரு தோள்வைத்த வாணன்றென் மாறைவண்ணச்
சூதலர் தொலகவிம் மித்திரண் மாமுலைத் தோகையரே.

---

* தொல். சொல். உரியியல், சூ. ௧௯.

இ - ள். தாழைக்காட்டை வேலியாகவுடைய கடல்சூழ்ந்த பெரிய புவியைத் தன்னிருதோளில் வைத்தவாணன் தென்மாறைநாட்டில அழகு பொருந்திய சூது இடுக்கண்பட்டுச் சுருங்கப்பூரித்துத் திரண்டபெரிய முலையையுடைய தோகைபோல்வீர்! போதுகளமலர்ந்து இருளைச்சினக்கும மெல்லியகுழலினையும் புனைந்த பூணினையுமுடையாள் தனகாதலனபின்வர யாம் கண்டனம். எ - று.

அல்-இருள். ஓதி - கூந்தல். மெல்லோதிப் புனையிழை-அன்மொழித்தொகை. கண்டல் - தாழை, புயவலியால் குறம்படக்கிப் பூமியைக்காத்தலான 'மாதலந்தன்னிருதோள்வைத்தவாணன்' எனக்கூறினார். அலாதல-இடுக்கண்.| "அலந்தோர்க்களிக்குமபொலமபூட்டுசேஎய்" எனவும், "அற்றார்க்கு மலர்ந்தார்க்கும" எனவும பிறருங்கூறிய வாறுணர்க. விம்முதல்-பூரித்தல். (௨௫)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்ந்தல்

(இது வெளிப்படை.)

வாளேய் விழியினை மயிலனை யாடஞ்சை வாணனைவெற்பில
வேளே யனைய விடலையி னோசுர மீண்டினிம
கேளேய் பதிவரு மென்னநல வோர்சொல்லக் கேட்டனமிந
நாளே யனையநன் னாளோ வோசென்ற நாள்களிலே.

இ - ள். வாளைப்போன்ற விழியினையுடைய நின்மகளாகிய மயில போன்றவள தஞ்சைவாணனை வெற்பிடத்துக்காமனையொத்த விடலையினோடே சுரம்போய்மீண்டு நமசுற்றத்தாரிருக்குமநகரின்கணணே வருமென்று நலலோர் சொல்லக்கேட்டனம, ஆதலின இந்நாளைப் போன்ற நன்னாள கழிந்தநாளகளிலேயுளவோ? எ - று.

வேள்-காமன். விடலை - பாலைநிலத்தலைவன். கேள - சுற்றம. ஏகாரம் மூன்றுமசைநிலை. (௨௬)

நற்றாய்கேட்டவருளங்கோள்வேலனைவினுதல்.

(இது வெளிப்படை.) வேலன-வெறியாட்டாளன்.

தென்மாறை நன்னகர் மன்னவன வாணன் செழுந்தஞ்சைசூழ்
பொனமா திரத்துப புலனுணர் வீரசுரம போய்வருவோன்
எனமானை யென்மனை யிற்றரு மோதன்னை யின்றநற்றாய்
தன்மா நகருய்க்கு மோசொலலு வீரொன்று தானெனக்கே.

இ - ள். தென்மாறைநகர்க்கு மன்னவனாகிய வாணனது செழுந் தஞ்சையைச்சூழ்ந்த அழகியதிக்கிலுள்ளீர் நினைக்குமறிவை எல்லாமறி

| திருமுருகாற்றுப்படை, பழமுதிர்சோலை, வரி, ௨௭௩.

வீர்! சுரம்போய் மீண்டுவரும் தலைவன் மானனையாளை என் மனையிலே தருமோ? தன்னையீன்ற நற்றாயிருக்கும் தன்பெரியநகர்க்கே செலுத்துமோ? எனக்கொன்று சொலலுவீர் எ - று.

பொன் - அழகு. மாத்திரம் - ஆகுபெயர் புலன் - அறிவு. உய்த்தல் - செலுத்தல. வேலன் - முருகவேளடையாளமாய்க்கையிலே வேலபிடித்துத் திரிபவன்.

தலைவன் சேணகனறமை செவிலிதாய்க்குணர்த்தலும் தலைவன்றம்மூர் சார்ந்தமை சாறறலுமிரண்டுந்தெளிதல; தலைவிமுன்செல்வோர் தம்மொடு தான்வரல்பாஙகியாக்குணர்த்திவிடுத்தலும், பாஙகியர்நற்றாய்க்குணர்த்தலும் இரண்டுமெழுச்சி, நறறாய்தலைமகனுளங் கோள்வேலனைவினாத லொன்றும் வினாதல், பாஙகியாக்கு முனசெல்வோர் உணர்த்தலொன்றும் செப்பல்.

மீட்சிமுற்றிறறு.

---

தன்மனைவரைதல்

தன்மனைவரைதல் எ - து உடன்போய் மீண்டுவந்த தலைவன்தலைவியைததன்னூராகருககூட்டிப்போய்த் தன்மனையின்கண் வரைந்துகோடல்.

‡"வினாதல்செபபல் மேவலென்றிறைவன்
றனாதில்வரைதற்ன்மூவகைத்தே".—என்னுஞ் சூத்திரவிதியால் தன்மனைவரைதல் மூவகைப்படும்.

நற்றாய் மணனயாவேட்கையிற் செவிலியை வினாதல். எ - து. தலைவி நறறாய் தன்மனையின் மணஞ்செய்யும் விருப்பினாற் செவிலியைவினாதல். இதறகுச் செய்யுளிற்கவியிலலை

*தாமாக மேவினு ம்மனைக் கேவந்து தண்சிலம்பார்
மாமா றினைமணஞ் செயவதற கேமரு வாரகமலப்
பூமாது கேழ்வன புகழ்த்தஞ்சை வாணன் பொருப்பிலினி
யாமா றுயிரனை யாய்சொல வமோவவ ரன்னையாக்கே. (௩௫௫)

செவிலிக்கிதுளைவரைந்தமையுணர்த்தல்.
(இது வெளிப்படை.)

என்று மியபபுவ தியாய்க்கினி நாமன்னை யின்றுதமமில்
கொனறுரு கித்திலக் கோஙதநம் மாதைக் கொடிநெடுந்தேர்க்
கன்றுடா மணகொண்ட வாணன்றென் மாறையிற காதலர்தாம்
கன்றுண மணமபுணர்ந் தாரொன்று தூதர் நவினறனரே.

---

‡ அகப்பொருள விளக்கம், வரைவியல், சூ. உ௩.
* இக்கவி யாழ்ப்பாணத்து வல்லை-சபாபதிபிள்ளை யவர்கள்பதிப்பித்த மூலப்பிரதியில் காணபபட்டபடியே பதிப்பிககப்பட்டது.

இ - ள். அன்னையே! கொடிகட்டிய நெடுந்தேரையுடைய கன்னடர் மண்ணைக்கொண்ட வாணன்றென்மாறை நாட்டில காதலர்தாம தம்மில் லத்துப் பெருமையார்ந்த முத்துமாலையைதந்த நம்மாதை நல்லநாளிலே மணம்புணாநதானொன்று வநததாதுவர் சொன்னா, இன்று நாம்ஆய்ககியமபு வது இனி யென்னா? எ - று.

கொன பெருமை. நித்திலத்தொடை-முத்துமாலை. நவில்தல் - சொல்லல்.

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்

(இது வெளிப்படை)

எனைக்கேளிருநின் றிப்பற்றவும் கேமண வினமெய்தி
அனைக்கேணமை நணணிய வணணலபின ஞகமைமன்னையினநிம்
மனைக்கே வருமென வநதுசொனா ராதஞ்சை வாணனவெற்பில
சுனைக்கேழ் நனைகமழ் நீகழு லாய்சில தூதரினமே.

இ - ள். தஞ்சைவாணனை வெற்பிடத்திருக்குஞ் சுனையிறபூசதநிறத் தையுடைய கமபொருநதிய கழூர்சைசுழல குழலாய! எல்லாசகேளிரும் மணப்பநதரிலவநதுநினறு பணசடஙகு செய்ய, தலைவனூரில மனைவின் பதனதியொடு அநதன்மைசதாங்கிய கடவையபொருந்திய தலைவனபின்னே நம்மனை போலவாள் இனறு இடமனையிடததது இபபோது வருமெனச்சில தூதாவந்துசொனனா எ - று

எனைககேளிரும - எல்லாககேளிரும. அனைககேணமை-அதனைத் தாஙகியவுறவு "அனைநிலைவகையொடாஙகெழுவகையாம"—என்னுஞ்சூத்திர ததுஉரையாசிரியரூரையானுணாக அண்ணல்-தலைவன் ஆநபிரிவிலலைச நிலை, †"ஆகவாக வெனபரிசின ஹுபாவயின முனறுமபிரிவிலலைசநிலை" என் னுஞ் சூததிரநதானுணாக. 'காரொடிர் கானமோடி மேனயாக' என்னும உதா ரணத்தானுமுணர்க அன்னைகாதலபறறிவநத சொல கேட்டிறம்.நனை-கள். இன்னே- இபபோதே. (௯௫௮)

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கு இயம்புகென்றல்.

(இது வெளிப்படை.)

கோபுரஞ் சோலை கொடிமதின் மாடங் குலாவிமையோர
மாபுரம போலுநதென மாறைவ ரோதயன வாணனவெற்பில
நீபுரநதேதநத மாதையாம கியாமணை நீநமைசொனன
நூபுரஞ் சூழடி யாயசென்று கூறு நுமாதமக்கே

இ - ள். பொனனூபுரஞ்சூழ்ந்தஅடியிணையுடையாய்! கோ புரமுஞ் சோலையுமகொடியுமமதிலுமமாடமுமவிளங்கபபட்ட அமராவதியை யொக்கும் தெனமாறை நாடடில் வரோதயனாகிய வாணன்வெற்பில்

† தொல். சொல இடையியல, சூ. ௯௨.

நீபாதுகாத்துத் தந்த மாதை என்னூரில் வரைந்தீராமையை நுமர்தங்களுக்குச் சென்றுசொல்லாய். எ - று.

'கோபுரஞ்சோலை கொடிமதில் மாடம்' என்புழி எண்ணும்மை தொக்கு நின்றன. குலவுதல் - விளங்குதல். இமையோர்மாபுரம் - அமராவதி. புரத்தல் - காத்தல். வரைநீர்மை - வினைத்தொகை. நூபுரம் - சிலம்பு (௩௫௮)

## பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்

(இது வெளிப்படை.)

அன்னைக் கியம்பின னண்டலை யானமுன் னறிந்து தென்னன்
தனைப்ப பணிந்துகுற் றேவல்செய் யாது சமர்க்கெழுந்த
மன்னைப் புறங்கண்ட வாணன்றென் மாறை வரையிலெங்கள்
பொன்னைப் புணர்ந்துநுங் கேண்முன்னர் நீபோன புணர்ந்ததுவே.

இ - ள். ஆண்டகையே! பாண்டியனைப்பணிந்து குற்றேவற்றொழின் முறைமைசெய்யாது போர்க்கெழுந்த மன்னைப்புறங்கண்ட வாணன்றென் மாறைவரையில் எங்கள் பொன்போன்றவளைக்கூடி நுங்கள் சுற்றத்தார் முன்னம் நீதிருப்பூட்டியது யான்முன்னையறிந்து அன்னைக்கியம்பினேன் எ-று.

ஆண்டகை-ஆண்மைமிகி. தென்னன்-பாண்டியன். குற்றேவல்-சிற்றூளாய்ச்செய்யுமேவல. பொன்-ஆகுபெயர். பொன்புனைதல்-திருப்பூட்டுதல்.

மணமயாவேட்கையினற்றாய் செவிலியைவினுதலொன்றும் வினுதல். வரைதமை பாங்கி செவிலிக்குணர்த்தலும், வரைதமை செவிலி நற்றாய்க்குணர்த்தலும், பாங்கிதானது முன்னேசாற்றியதுரைத்தலும் மூன்றுஞ்செப்பல, தலைமகனுமாக்கியமபுகென்றனறலொன்றுமமேவுதல (௩௫௯)

சனமனைவரைதல் முற்றிற்று

## உடன்போக்கிடையீடு.

உடன்போக்கிடையீடு எ - து நமமனையில் வரைந்துகொள்ளாது தன்னூரில் வரைந்தானென்று தலைவிசுற்றத்தார் வெறுப்படைதலால் தலைவியையுடன்கொண்டுபோமபோது தலைவி சுற்றத்தாரிடையீடுபட்டு மீண்டு தலைவிவருதல்.

‡ "போக்கறிவுறுத்தல் வரவறிவுறுத்த
னீக்கமிரக்கமொடு மீட்சியென்றாங்
குடன்போக்கிடையீ டொருநாலவகைத்தே." — என்னுங் குத்திரவிதியால உடன்போக்கிடையீடு ஒருநால்வகைப்படும்

‡ அகப்பொருள விளக்கம, வரைவியல, சூ-உஎ.

### நீங்குங்கிழத்திபாங்கியர்தமர்க்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

நீங்குங்கிழத்தி . . விடுத்தல். எ-து. ஐம்பதாவதாகாள் தன்னூரைவிட்டு நீங்குங்கிழத்தி எதிர்வருவோர்தம்மொடு தலைவனுடன் செல்லுந் தனசெலவைப் பாங்கியர்க்குணர்த்திவிடுதல்.

வளவேய் மிடைந்த வழிபடர் வீர்செங்கை வாணன்றஞ்சைத்
தளவேய் நகையென் றுணைவியர் பாற்சென்று சாற்றுமின்போர்க்
களவே ளனையவோர் காளைபின் போயினள் கான்பனிநீத்
திளவேனில் வலலிபெற்றுஞ் செவ்வந்தி தழிலெயதியன்றே.

இ-ள். வளம் பொருந்திய மூங்கிலமிடைந்தவழியில் செல்கின்றீர்! பனிக்காலத்தைநீத்து இளவேனிற்காலத்தை வலலிபெற்றுப்போல்துன்ப மெல்லாமொழிந்து அழகை மிகுதிக் காட்டிடத்தில போர்க்களத்தின் முருகவேளையொத்த ஒருகாளைபின்போயினள் என்று சிவந்தகையையுடைய வாணன் தஞ்சையிலிருக்கும் தளவையொத்த நகையையுடைய என்பாங்கியர்பாற்சென்றுசொல்லுமின். எ-று.

மிடைதல் - நெருங்குதல். படர்தல் - செல்லுதல். தளவு - முல்லை. கான் - காடு. எவ்வம் - துன்பம். எழில் - அழகு. சுற்றத்தார்செய்தவெறுப்பை எவ்வநீத்தென்க குறிப்பாற் கூறியவாறுணர்க. (ருசு0)

### தலைமகள்தன்செலவு ஈன்றாட்குணர்த்தி விடுத்தல்.

(இது வெளிப்படை)

வாயார நுங்களை வாழ்த்துகின் றேன்றஞ்சை வாணன்வெற்பில்
சாயாத மாதவத் தாழ்சடை யீரன்பர் தமமொடின் றியான்
சேயாறு தோமிசைச் செலவதெல் லாமெங்கள் சேரியிற்சென்
றியாயாகிய கொடி யாட்கினி தாக வியம்புமினே.

இ-ள். தஞ்சைவாணன் வெற்பில் கேடிலலாதமாதவத்தினாற்கொண்ட தாழ்ந்தசடையுடைய வந்தணீர்! நுங்களை வாய்நிறைய வாழ்த்துகின்றேன், தலைவர் தம்முடனே இன்றுயான் சேண்வழியில்தேரின்மீது செல்வ தெல்லாம் எங்களூரின்கண் சென்று தாயாகிய கொடியாட்கு இப்போதே இன்பாகச் சொல்லும். எ-று.

சாயாத-கேடில்லாத. சேயாறு-சேண்வழி. இனிதாக என்பது குறிப் பாற்கூறியவெறுப்புமொழி. (ருசுக)

நற்றாய்க்கு அந்தணர்மொழிதல்.
(இது வெளிப்படை)

மருள்கொண்ட சிந்தை மலைகிழ வோய்தஞ்சை வாணன்வெற்பில்,
வெருள்கொண்ட மென்பிணை வென்றகண் ணாள்வென்றி வேல்வல
ங்கை, அருள்கொண்ட நெஞ்சினொ டண்ணல்பின் னேயகன் றாள
கலவான், இருள்கொண்ட கொண்டல்செல் லாவரை சூழ மிருஞ்
சுரத்தே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பினிடத்து மகளைக் காணேமென்று மயக்கங்கொண்ட மலைக்கரசியே! வெருட்சிகொண்ட மென்பிணைமானை வென்றகண்ணாளாகிய நின்மகள் வெற்றிவேலை வலங்கையினும் அருளை நெஞ்சினுங்கொண்ட ஓர் வேந்தன்பின்னே [illegible]ன்ற வானிடத்துச் சூல்கொண்ட மேகம் [illegible]ருகா[illegible]ன்றி[illegible] [illegible]ருந்த பெரியகாட்டிடத்தே யகன்றாள். எ - று.

மருள் - மயக்கம். வெருள் - வெருட்சி. [illegible]பனையான, 'வென்றி வேல்வலங்கை யருள்கொண்ட நெஞ்சின' என்ப[illegible]மமைத்தொழாலை, வென்றிவேல் வலங்கையினும், அருள்நெஞ்சினுங்கொண்ட உறுவனாகியகால் வேல்செலுத்தலும், வணங்குங்கால் அருள்செலுத்தலுங் கூறியவென்க. வரை - மூங்கில். ([illegible])

நற்றாயறத்தொடு நிற்றலின் தமர்பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குணர்த்தல்

உவலைப் பதுக்கை முரம்பு செல்லாம லுலகமங்கை
தவலைத் தவிர்த்த தமிழ்த்தஞ்சை வாணன் றரிபலர்போம்
கவலைக் கடத்துச் சிலைத்திரை கோலிக் கடும்பகழித்
துவலைப் படைக்கட லேன்றலபொற் றேரவங்களுஞ் சூழ்கின்றதே.

நற்றாயறத்தொடு... உணர்த்தல் எ - து. அந்தணர் மொழியவறிந்த நற்றாய் குறிப்பான அறத்தொடு நிற்றலில் தமர் சினந்து குழாங்கொண்டு பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குணர்த்தல்

இ - ள். தோன்றலே! தழைகளோடுகூடிய குறுங்காறுகள் மூடியகேடு செல்லாமல்நிலமங்கையதுவளங்கெடுதலைத்தவிர்த்த தமிழ்த்தஞ்சைவாணன் பகைவர் செல்லுங் கவர்வழியில் வில்லாகிய திரைகளையுண்டாக்கிக்கடிய அம்பாகிய துவலைகளைச்சிதறிப் படையாகிய கடல் நின்றுபொற்றேராகிய மரக்கலத்தைச் சூழ்கின்றது எ - று.

உவலை - தழை; * 'உவலைக் கூரையொழுகிய தெருவில்' என முல்லைப் பாட்டிற்கு நச்சினார்க்கினியார் தழைபாலேவேய்ந்தகூரையென வெழுதிய

* முல்லைப்பாட்டு, வரி, உ௯.

வுடையானுமாக. பதுக்கை-சிறுதூறு, முரம்பு-மேடு. தவல்-கேடு. கவலை-கவர்வழி. கடம் - காடு. திரை - அலை. பகழி-அம்பு. வங்கம் - மரக்கலம். இஃதியைபுருவகம். (௩௬௩)

### தலைமகளைத் தலைமகன்விடுத்தல்.

(இது வெளிப்படை)

ஆறலை வெஞ்சிலைக் கானவ ரேலெனகை யம்பொன் றினால்
நூறலை யஞ்சலை நுண்ணிடை யாயநும ரேலவர்முன்
சேறலை யஞ்சுவல் செல்லலம் பைம்பூகச் செழும்பழுக்காய்
தாறலை தண்டலை சூழ்தஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

இ - ள். நுண்ணிடையாய்! எண்டிசை கூடிவருகின்றோர் வழியை அலைக்கும் வெய்ய சிலையையுடைய வேடராகில் என்கையிற்பிடித்த ஓரம்பினைப் புறப்பொருளில் தும்பைத்திணையிற் கூறிய நூழிலாட்டென்னுந் துறைமேற்றோன்றக்கொன்றுகுவித்தலைப் புரிவேன், நும்முறவினராகில் அவர்முன் செல்லுதலை யஞ்சுவேன், ஆதலான் இவரால் அப்பகமுன்னது செழித்தபாக்குத் தாறுகாற்றலைசையுஞ் சோலை சூழ்ந்த தஞ்சைவாணன் தமிழ்வெற்பிடத்தில் யான்செல்லேன், எ - று.

ஆறலைத்தல்-வழிபறித்தல், நூறல்-கொல்லுதல். 'நுமரேலஞ்சுவேன்' என்பது நும்முடைய தமராகில் அவரைக் கொலைசெய்யவேண்டும், செய்தால் நீ துயருறுதி ஆதலால் அஞ்சுவன் என்றான். தாறு-குலை. தண்டலை - சோலை. நூழிலாட்டென்பது ஒருவன் பலரைக்கொன்று குவித்தல் — என்னை "பலபடை யொருவற் குடைதலின் மற்றவ னொள்வாள் வீசிய நூழிலும்" என்னுஞ் சூத்திரத்தானுமாக. இதற்குக்காரணம் நச்சினார்க்கினியத்திற் கண்டுகொள்க. யான்செல்லேன் என்பது அவாய்நிலையான் வந்தது. (௩௬௪)

### தமருடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றாற்றல்.

தமருடன் செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றாற்றல் எ - து. தமருடன் செல்லப்பட்ட தலைவி அவன்புறங்காட்டிப்போதலைநோக்கிக்கவலைப் பட்டுத் தேறுதல்.

ஏமா னனவஞ்சு மேற்காத தவினெவ் விரவிபொறேர்
வாமானின் வாழ்வன வாகப்பன் னூட்டஞ்சை வாணனென்னா
போமா னதரிடத் தென்னையர் தோன்றப் புறங்கொடுத்த
கோமான் மணிநெடுந் தேர்நுகம் பூண்ட குரகதமே.

இ - ள். தஞ்சைவாணனுக்குப் பகைவராயுள்ளார் செல்லுமான்சஞ் சரிக்கும் வழியிடத்து என் தந்தையர் தோன்றுதலைக்கண்டு புறங்கொடுத்துச் செல்கின்ற தலைவனது மணியிழைத்த நெடுந்தேர் நுகத்திற்பூட்டிய குதிரைகள் அம்புகண்ட மான்போல அஞ்சுகின்ற என்னைக்காத்தலால்

